உ

தேவிசகாயம்.

ஸ்ரீமத்

கைலாயவர்க்கத்தடிமையாகிய

திருக்குருகூர்

ஞானசித்தஸ்வாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# ஜடாதார விளக்கமென்னும் திருமந்திரம்.

---

# இருநூறு.

---

இஃது

சேலம் ஜில்லா நாமக்கல் தாலூகா

சோளசிகாமணி மிட்டா ஜமீன்தார்

ம-ா-ா-ஸ்ரீ

இழம்பிள்ளை-குருநாதசெட்டியார்

அவர்களுடைய வேண்டுகோளின்படி

—◆—

சேலம்

சுதேசாபிமானி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

கர-௵ பங்குனி௴

தேவி சாகயம்.

குருவாழ்க.

# சரித்திரவரலாறு.

நித்தியா பரோக்ஷகர்த்த வியஞ்சிருஷ்டித்த இவ்வுலகத்தினிடத்தப்பிணி, மூப்பு, மரணமென்னு மவத்தைகளை நீக்கி பிர்மானந்த வாழ்வை யடையுந் திருவருட்கருணையோக்கியநித்தியசொரூபர்களான சாக்ஷாத் சித்தாதிகளின் கருணைப்பெருக்கால் தென்னாடுகள் பலவற்றினுஞ்சிறந்து விளங்காநின்ற பாண்டி மண்டலத்திற் சிறப்புற் றோங்கிய தாம்பிர பர்ணி நதிக்கரையிற் றிருக்குருகூரென்று வழங்கும் நவலிங்கபுரத்தி லவதார புருடரா யெழுந்தருளிப் பிரகாசிக்கும் ஸ்ரீமத் ஞானசித்தஸ்வாமிகள் தா மடைந்த ஸ்வானுபூதி பிரத்தியட்சத்தை யெளிதில நிந்தயாவரு முணரும்பொருட்டுத்திராவிடபாஷை யிற்றிருவாய் மலர்ந்தருளிய சுமார் பன்னீராயிரங் கிரந்தங்களுள் அவரவர்களுக்குக்கிடைத்த மட்டு மாககாங்கு மச்சிற் பதிப்பித்துக்கொண்டு வருவதா லும், இச்சடாதாரவிளக்கமென்னுந்திருமந்திரமான து மேற்குறித்த ஸ்வாமிகளருளிய கலைக்ஞான தீப மாயிரத்தின்கருத்தைச்சார்ந்ததாயும், மற்றயநூல்க ளுக்கும் திறவுகோல்போலுமிருப்பதா லிதனை முன் னரச்சியற்ற நேரிட்டது இன்னுமுள்ளனவும் முறை யே பதிப்பிககப்படும் மற்றய நூல்கள்தோறும் இந் நூற்கதிபரின் சரித்திரங்களைப்பார்த்துக்கொள்க.

(குருவாழ்க)

# இருநூறு.

## நூல்.

சுருதிமுடிவிற் றுலங்கிடுஞ்சோதிக்
குரியவராகும் உயர்முனிசித்தர்
பிரியமதாகப் பேசியநூலை
அறிவுடன்பார்க்க வானந்தமாமே. (க)

ஆனந்தபோதத் தறிவுள்ளமேலோர்
யீனந்தவிர்த்திங் கிருந்தனரப்பா
தானந்தவநெறி சார்பதினின்று
பானம்பருகப் பகருவோங்கேளே. (உ)

கேளேமுனிவர் கெவுளிகள்சித்தர்
பாளேபோகாமற் பகர்ந்திடுநூலின்
சூளேமறப்பைத்துலக்கியிப்பாரில்
ஆளாகவைத்த அறுமுகன்காப்பே. (௩)

காப்பான்மூலங் கணேசனூர்வட்டந்
தாப்பாய்முக்கோணந் தன்னிலேகேளு
மூப்பானஓங்கிறீங் முனியாதஸ்ரீங்கங்
வாக்கானஅம்மை வல்லபைதானே. (௪)

தானனுய்யர் தனில்நடுவேகேள்
வேனுகொண்டு விரற்பிரமாணம்
ஊனுயிடையில் கலையதின்மையர்
தானுஞ்சுழிமுனை தன்னிறங்கேளே. (௫)

கேளேசிறமுங் கெடியானபால்போல்
சூளேவொடுக்கர் தோற்றமுங்காண
மூளைகுருவின் னடிதனிற்றெண்டு
நாளேயிராறு வருடமுங்காரே. (சு)

வருகின்றசுவாதிஷ் டானத்திற்கேளு
விரியும்நாற்கோணம் விட்டதின்பின்பு
முரியிருகோணம் முக்கோணவட்டம்
அரியும்பிரமன் னருள்சரஸ்வதியே. (எ)

அருள்கின்றமந்திரம் அனாகிறேம்கேளு
பொருளானநம்மம் புகளும்அம்யென்று
தொளும்கிறமோ பொன்னெனத்தோன்றி
யிருவிளயகற்றி யிடேற்றுந்தானே. (அ)

யேத்தங்கணேச னிருப்பிடத்திற்கும்
பார்த்தேயிரண்டு விரற்கடைதள்ளித்
தோற்றுஞ்சுவாதிஷ் டானமறிந்தால்
மாத்திரம்மணிபூ ரகத்தினைக்கேளே. (கு)

கேளடாநாபிக் கமலத்திலேதான்
ஆளடாவிந்து வதின்மேற்பிரபை
வாளேவகாரம் உகாரமுமிட்டு
தாளேஓங்காரஞ் சிரிங்கென்றுகட்டே, (க0)

கட்டியபின்பு கருத்துடனேகேள்
அட்டியாமூல மதிலிதழ்நாலு
வட்டமாமண்ணில் வளைந்திதழாறு
செட்டியநாபியின் கின்றிதழ்பத்தே. (கக)

பத்தியாமாலும் பச்சையாம்வருணம்
வெற்றித்திருமகள் வீற்றிருப்பார்கள்
உத்தியதாக வுகப்புடன்கண்டால்
முத்தியிற் சேர்க்கமுன்றுணையாமே. (கஉ)

துணையாஞ்சுளுத்திச் சொன்னமுக்கோணம்
அணையாயதனுள் ளறுகோணமிட்டு
இணையாதவிந்தை யிட்டதினுள்ளே
அணலானசிம்வம் கிலீமென்றுசாற்றே. (கரு)

சாற்றியபின்பு தன்னிறங்கேளு
தோற்றியசெம்மை சொல்லிதழீரு
றேற்றியருத்திரன் ருத்திரியோடு
போற்றியே நிற்கும்புதுமையைப்பாரே (கச)

பாரேவிசுத்திப் பயனதைக்கேளு
கூரறுகோணங் கொளுகியவிந்து
சேரோவகாரஞ் செழித்துஓங்காரம்
வாரிறீங்காரம் வகுத்தசிவயவே. (கரு)

சிவயநமவெனச் செபித்திடும்போது
அபயந்தந்தோமென் றழகாமகேசன்
உபயபதத்தி னொடுக்கமறிவித்
திதையச்சுடரா யேற்றுவிப்பாரோன். (கசு)

ஏற்றுமகேசற் கிதழுமீரெட்டு
தோற்றுநிறம்மைக் கருப்பதுவாகும்
சாற்றுமுறையே தனித்தனிகண்டாற்
சூத்திரங்கண்டு துலங்கிடுவாயே. (கள)

துலங்கும்லலாடஸ் தானத்திலேதான்
இலங்கும்மனோன்மணி யீசர்பொற்றுளில்
நலந்தருவட்டம் நடுவதிற்கேளு
கலந்தவைங்கோணம் கட்டியபின்பே. (கஅ)

பின்புமுக்கோணம் பேசுமோங்காரம்
அன்புடனிட்டு மதன்பிறகேசேர்
இன்பமதாக வழுதிடுஹும்என்று
துன்பமகற்றிச் சொலித்திடுவாறே. (கக)

சொலித்திடும்போது சொல்லிதழிரண்டு
கெலிக்குஞ்சதாசிவன் றன்னிறங்கேளு
ஒலிக்கும்படிக நிறமதுவாகி
சலிப்புகள்நீக்கித் தாளுளுவாரே. (உ0)

ஆளுவதன்றி யமூர்தமும்பாயுந்
தாழ்வுவராமற் றுனுளாத்தோம்யாஞ்
சூளுமூலகிற் சொல்லாதேதோஷம்
மாளுவதில்லே வழியுரைத்தேனே. (உக)

உரைத்தோ மூலகில்உத்தமர்க்காக
மரைத்தவிதத்தை மகிழ்வுடன்யாமும்
நிரைத்தகிழோரின் நிட்சயங்கண்டு
பரைத்தமேலாறுதாரமும் பாரே. (உஉ)

பாரடாஅக்கினி மண்டலத்துள்ள
கூரையறிந்தாற் குறையாதசித்தநீ
சீரடாவாசி திரும்பாதபாரு
பேரா.ரகண்டாற் பின்புசொல்வோமே. (உங)

சொல்லுவதென்ன சோதியைவிட்டு
புல்குமாதித்தன் மண்டலங்கேளு
வல்லவனுனல் வகுப்பாய்பிரணவம்
எல்லையாயதனுள் உகாரமுமிட்டே. (உ௪)

இட்டிடுநீயும் எருதவாசி
கெட்டியதானு லமுர்தம்ததம்பும்
மட்டிலேயுண்டு மகாசித்தனுகிக்
கிட்டியசந்திரன் மண்டலம்பாரே. (உ௫)

மண்டலம்மூன்றும் வகையாய்முடிந்தபின்
ஒண்டியஓரிதட் டாமரைமீதில்
அண்டர்கள் தேவரனைவரும்போற்றிக்
கொண்டிடுமவளைக் கூறுகின்றேமே. (உ௬)

கூறுந்துரியா தீதப்பதிதனில்
ஏறும்மதியை யிழுத்துப்பிடித்துமே
யாருமறியா திருந்தவாலாம்பிகை
கூரையரியக் கூறினேம்பாரே. (உ௭)

பாரோநீயுச்சிஸ் தானத்தின்கீழே
சீரோயுண்ணாக்கின் றிருமடத்தப்பால்
வீராகின்ற விளக்கினைத்தூண்டி
ஆராய்ந்துபார்க்கி லம்பிகைதானே. (உ௮)

அம்பிகை யென்னுமாதிப்பொருளைக்
கும்பிடவேண்டும் குறிப்பதைக்கேண்மின்
தெம்புமிடையின் கலையைநெறுக்கி
நம்புஞ்சுழியின் னூட்டிவைப்பாயே. (உ௯)

வைத்திடுகின்ற வகையதைக்கேளு
பொய்த்திடாமற் புகலுவோம்யாமும்
நைத்தமனிதர் நயம்பெறவேண்டி
சொஸ்தமதாகச் சொல்லுவோம்கேளே. (௩௦)

கேளுவங்கென்று கெடியாயிழுத்தபின்
மூளுசிங்கென்று மூட்டியபின்புகேள்
ஞுளுமங்கென்று சுளியில்நிறுத்திடு
பாளுமாகாத பருதியும்வீசும். (௩௧)

வீசும்பருதி வெகுகோடியாகிப்
பாசமொழித்துப் பலாபலன்காட்டும்
கூசிடும்கண்கள் குமரியைக்கண்டால
தாசனுமாகித் தனித்திருப்பாயே. (௩௨)

தனித்தேயிருந்து சமாதியில்நின்று
சனிப்பானஅன்னந் தண்ணீரிலையாய்
குனித்தருமாதங் கொண்டுயிச்சாதனை
பனிப்படச்செய்யப்பகர்ந்தனங்கேளே. (௩௩)

பகர்ந்தருமாதம் பாதிவயிறதாய்
தகர்ந்திடுமென்னந் தான்கொண்டபின்பு
யிகந்திடும்வாசி யிறையாமல்நிற்கும்
சுகந்தருஞ்சோதி துலங்குஞ்சடலம். (௩௪)

சடலம்வலுத்துத் தரமானபின்பு
உடலானதேகத் தொளியதுமின்னும்
யிடரானமாய்கை எல்லாமும்நீங்கும்
கடலேறுதோணி கைகண்டதாமே. (௩௫)

கண்டபொருளைக் கருதாதேதோஷம்
அண்டர்நகைக்க அழியுமுன்தேகம்
விண்டபொருளை வெளியுரையாமல
கொண்டவர்வாழ்ந்த குடியேறுவாரே. (௩௬)

யேறுவாரொன்று யெல்லோருஞ்சொன்ன
நீரமரிந்தசிறிதயான் சொன்னேன்
பாரினிலித்தைப்பக்குவர்க்கன்றி
யாவர்க்குஞ்சொன்னால நாசமுன்னுடலே.

நாசமதாகி நரகினில்வீழ்வாய்
தோஷமும்வந்து சுற்றிடுஞ்சொன்னோம்
ஆசைப்பசாசை யகற்றியெறிந்த
நீஷர்க்குச்சொன்னாற் செழித்திடுவாயே. (௩அ)

செளித்திடவேண்டில் தீட்சைகளோதி
களிப்புடன்கற்பங் கருத்துடன்கொள்ளு
பனிகொலைசெய்து பாரிற்சுழன்று
விளியவிந்தோர்க்கு விள்ளவொண்ணாதே. (௩௯)

ஒண்ணனயோகத் தொழுங்கதைக்கேளு
விண்ணணமென்று விழித்திடவேண்டாம்
கண்ணாதன்னால் கட்டுடனுன்றன்
நண்ணியமூக்கில் நடுவினிற்பாரே. (௪௦)

பார்த்திருந்தேபின் பகர்ந்தசுழியில்
சேர்த்திடுவிந்து திகைப்பறவொட்டி
சூத்திரமாகச் சொல்லுவோங்கேளாய்
மாத்தியவாசி வசிவசியென்றே. (௪௧)

வசிவசியென்று வாங்கியேமூச்சை
பசியாத்தலத்திற் பதித்திடும்போது
நிசியானசந்திரன் நின்றுமடங்கி
வசியாமிரவி வளர்ந்திடும்பாரே. (௪௨)

வளர்ந்திடும்போது வங்கெனத்தாங்கி
பொளிந்திடுஞ்சுழியில் புகலுமங்கென்று
தெளிந்திடக்கும்பித் திருந்திடிலப்பா
அளிந்திடாவண்ண மமூர்தத்தலம்பே. (௪௩)

அலம்புமாரமூர்த மறிவுடன்கொண்டு
ரலந்தனில்நீா னென்றபற்றற்று
நலக்குணமற்றுக் கொலுவதில்நின்று
லம்பொலிகேட்டுத் தேசிகராமே. (௪௪)

தசிகனென்ற திருப்பெயர்கொண்டு
காசிகன்போலுங் குறையாமல்வாழ்ந்து
;சிகளற்று ஆனந்தமாகி
'சியேகாலன் றனையுதைப்பாயே. (௪௫)

தத்திடுங்காலை உவப்புடன்கண்டு
கத்ததத்தவர்கள் பகையையெறித்து
தக்கும்கமனை தானடித்தோட்டிப்
தத்தபொருளின் புனைறிவாயே. (௪௬)

ரியாதமூட ரவளியிலேதான்
ரியோர்மொழியைப் பிறட்டெனச்சொல்லி
யாகப்போயிக் கோரகத்தில்
ரிவார்களென்று யானிட்டசாபம். (௪௭)

இடமானமூலத் தெழுந்திடும்வாசி
வடமாகஇன்னம் வகுத்திடுவோம்கேள்
திடமாயிருபத் தோராயிரத்தோடே
அடமானதாறு நூறுசுவாசம். (சஅ)

சுவாசம்பரந்த தொல்லைகள்மிஞ்சி
அவாசமதாக வழிந்திடாவண்ணம்
நிவாசமதாக நினக்குயாம்சொல்வோம்
கவாசமதான கம்பமதொன்றே. (சகூ)

ஒன்றானநாபிக் கம்பத்திலேதான்
நன்றானதுவாரம் நாலஞ்சதாகும்
சென்றானஅன்னம் செனறிடும்வாசல்
கன்றுந்துவாரங் கருவானதாமே. (ருo)

ஆகின்றதுவார மடைத்ததேயாகிற்
சாகின்றதேது தைரியம்மிகவும்
பே கின்றமனதைப் புகதடன்கட்டி
மாய்கின்றஅண்ணாக் கடியினிற்சேரே. (ருக)

சேர்த்துமங்கென்று திறமுடன்கும்பி
யேற்றதுவாரம் யீரேழடங்கும்
ஆற்றவேரவியி லழுத்திநீகும்பி
கூற்றமோடிக் குலைந்திடுவானே. (ருஉ)

குலைவதுமன்றிக் கோமகள்தாமும்
விலையதுவாகி வீற்றிருப்பாள்காண்
அலைவதுமேது அவனியிலேதான்
சவலைநெஞ்சினர்கள் தானறியாரோ. (ருங)

அறியும்விவரம் அறைகின்றேன்கேளு
பெருகியஉந்திச் சுழிக்கீழயிலேதான்
குறியுமறியக் கூறிடுவோங்கேள்
எரிகின்றநாடி யெழுபத்திரண்டே. (ருச)

எழுபத்திரண்டு ஆயிரமாமென்
றெழுவிதத்தினிற் றிசைநாடிபத்து
மொழுவிதத்தினில் மூன்றுயிர்நாடி
நழுவிப்போகாமல்நாஞ்சொல்லுவோமே.(ருரு)

சொல்லுவதென்ன வாதமோராசன்
வெல்லுவமென்ற பித்தமுமய்யம்
நல்குங்குணத்தின் ஞாயமுனக்குச்
சொலலாமற்சொன்ன தறையறிவாயே.(ருசு)

தறையுமறியச் சொல்லிடுவோங்கேள்
இறைகின்றவாதம் யிடைகலையாகும்
நிறைகின்றபித்தம் பின்கலையென்றேம்
விறைகின்றஅய்யம் விந்தவிற்றானே. (ருஎ)

தானேயிவைகள் தனிக்குணந்தன்னை
மானேயுனக்கு வகுத்திடுவோங்கேள்
வேனுனவாதம் விளங்கும்மலமாம்
தேனுனபித்தம் தெளிவானநீரே. (ருஅ)

நீரானபித்தத் தடியினிலய்யம்
சீராகிநின்ற விந்தினிற்சேருங்
கூறாயிவைகள் கொளுகும்விதத்தை
ஆராய்ந்தபார்த்தஅறிந்தகொள்வாயே.(ருகூ)

கொள்ளுமிடகலை கூறுமிடக்கால்
உள்ளதல்மாரி யுயரேயெழுந்து
அள்ளுங்கபோல மதனிலுஞ்சாடி
தெள்ளும்வலது கைதனிற்சார்பே. (சூ0)

சார்ந்திடும்பின்கலை தன்வலக்காலிற்
சேர்ந்தகபாலத் தெழும்பியும்பின்பு
கூர்ந்தயிடது கரத்தினிற்சேரும்
ஆர்ந்தசுழிமுனை யதனையுங்கேளே. (சூக)

கேளேகபோலத் திரண்டுக்கிடையில்
மூளேல்லாடஸ் தானத்தில்நிற்கும்
ஆளானமூன்றி லமர்கிரகங்கள்
ஊளேவிதித்தங் கோடிடும்பாரே. (சூஉ)

பாரானநாடி பத்துமேசென்று
தீரானதிசைவாய்வு தன்னிலேசேறுங்
கூரானஸ்தானங் குறிப்புடன்கேளு
ஆரானகாமிய மதன்பின்புதானே. (சூங)

தானேகுதிங்கால் சந்துடனுந்தி
மானேசிரமுடன் மார்புங்கரமும்
ஊனேபுருவம் முயர்ந்திடுமெத்தி
வானனகாது வகுத்திடுமூக்கே. (சூச)

மூக்கொடுபத்தாய் முன்னேபுகன்றோம்
தாக்கானமூலம் தன்னையறிந்து
வாய்ப்பாகநின்று வழியேயடைத்து
சேர்க்காதபேர்கள் தியங்கிவோரே. (சூரு)

வாரானமூல வட்டத்தினுள்ளே
ஊராயகார வடிவதுவாகிப்
பேராதியான பெருமானிருப்பை
ஆராய்ந்தபார்த்த அப்புறங்கேளே. (சுசு)

கேளேயகாரக் கிரீடமுகட்டில்
நாளேமனத்தை நயந்துடன்சேர்த்து
பாளேபோகமற் பருதியைப்பார்க்கத்
தாளேமகாரந் தலைகீழதாமே. (சுஎ)

ஆனமனத்தை யதனிடத்தோட்ட
வானமதாக வயக்குமறிவு
ஞானஞ்சென்ன மொருபோதுமில்லைத்
தானவனுகத் தழைத்திடலாமே. (சுஅ)

தழைத்திடும்போது சமரசமாக
அழைத்திடுவார்க ளறிவுள்ளமேலோர்
உழைத்தஉளைப்புக் குறுதியைக்கேட்டால்த்
தழைத்தசின்மயத்தின் தன்னருளென்னே.

சின்மயவர்க்கத்தடிமைநானென்ருல்
உன்னையெல்லோரு முபசரிப்பார்கள்
அன்னைபதத்திலடையவும் வைத்தே
முன்னைப்பிறப்பை மொழிந்திடுவாரே. (எ௦)

வாரானயோகம் வகையோவனந்தம்
போராகநிற்கும் பிரபஞ்சமீதிற்
கூராகநின்று குறிப்பையுணர்த்தி
ஆராயவொட்டா தலக்கழிப்பாமே. (எக)

அலக்கழிப்பனறி யதிலேகெதியில
மலைப்பைத்தவிர்க்கும் வகையுளாயார்கள்
சலிப்பதைநீக்கித் தானுணர்ந்தேதான்
இலக்குடசொன்ன திவ்விருநூறே. (எஉ)

இருநூறைப்போல யாருமுரைக்கிலர்
குருமுனிவர்க கொள்கையினாலே
பெருநூலைப்பார்த்துப் பேரதவாகி
விருநூறதனி லெழிதில்விளங்கும். (எங)

விளங்குமமுர்தம் விந்தவதாகும்
தளந்தனிலித்தைத் தின்றவன்ஞானி
உளம்புமனத்தை யொருநிலையாக்கி
யழம்புமமுர்த மதனிலேசேரே. (எச)

சேர்த்துமங்கென்று திரும்புசுளியிற்
பார்த்திடும்போது பராபரனியே
சூத்திரமாகத் துலங்குந்திரோகங்
காத்துமடங்கிக் கதிபுகுலாமே. (எரு)

கதியாங்கமலச் சுழிமுனைமீதிற்
பதியாகநின்ற பரத்தையறிந்து
மதியாம்வகார வளையத்தினாலே
விதியாமனத்தை விலசத்துலவப்பாயே. (எசு)

வைத்தயிழுக்க வகையளசக்கேளு
பொய்த்திடுகாமற் புசலும்வாமப்பா
செய்த்தபடியே திரும்பமகா
சொஸ்தக்கொளுக்கிவழியிழுப்பாயே. (எஎ)

இழுத்திடும்போது வெற்றமனத்தை
யழுத்தமதாகி யதனைப்பிரியாச்
சுழுத்திப்பதியிற் சுருக்குடன்வைத்தாற்
பழுத்துன்சரீரம் பரஞ்சோதியாமே. (எஅ)

ஆறுமனத்தை யடக்கும்வகைகேள்
வேறுமன்மதனை விவேகத்தினாலே
கோகயிழுத்து அனியகரத்துட்
போகின்றவாவா புகலுவோங்கேளே. (எக)

புகழுமகாரப் பொற்கயிர்தன்னால்
இகழ்வறக்கட்டி யேற்றுமகரம்
வினைவினில்வைத்து வியப்புடனேயத்
துனைவினில்வைக்கச் சுருதிமுடிவே. (அ0)

முடிவினிற்றோன்றும் மூடரிக்தோரிப்
படிதனிற்பரம ஞானியதாகும்
அடிமுடிகண்டு அமர்ந்திடுவோர்க்கு
நடுவேனுங்கண்டு நடுங்கிடுவாரோ. (அக)

பாரேயிச்சாதனைப் பயின்றிடும்போது
நேரேபொதிகை முனிவன்றியானம்
கூராகச்செய்து கொள்கியசாபர்
தீரேபிறகு தீர்த்தபின்றானே. (அ௨)

சாபந்தவிர்த்து சடாதாரத்தேரி
கோபந்தவிர்த்து குருமொழிகொண்டு
பாவங்கள்சிதறும் பரசிவன்றன்னொடு
பாவகமாக வுடன்சேரே. (அ௩)

சேர்த்திடும்வட்டச் செழுஞ்சுடர்மேலே
பார்க்குமதியாம் பதியினுக்கப்பால்
வாய்ப்பாகநின்ற வாசலுங்கண்டு
தாப்பானகம்பர் தன்னையும்பாரே. (அச)

கம்பத்தடியைக் கருத்துடனேதான்
இன்பமதாக யிடைவழிக்கண்டு
தம்பிமுகனுஞ் சுழியதுதன்னில்
சம்பியைப்போலுங் கமலமலரே. (அரு)

மலமாயறிந்த மகாசித்தனுமி
குலமைவகளாகுங் கூச்சலுங்கண்டு
அலைகன்மோகாத வருங்கடல்போல
குலாவியேநிற் குங்குறிப்பாயே. (அசு)

குறியாமிரவி கூடிடுமெய்யம்
அறிவாகநின்ற வஷ்டகிரிமேல்
தரியப்பதத்தின் றெற்றத்தருளால்
விரிவாகநின்று விளங்கிடும்பாரே. (அஎ)

விளங்கிடுங்கலசம் விந்தனைப்போல
தழும்பியேநிற்குந் தரத்தையுணர்ந்து
களங்கம்கற்றி கருத்துடனேதான்
உளமேகுளிர வுப்புடக்கேளே. (அஅ)

கேளடாவண்ணுக் கடியதிலேதான்
கோட்டாவன்றிக் குலாவுமமுர்தம்
தாளேயமுர்த தலத்தையரிய
வேளேயெமக்கு விளம்பினதாமே. (அக)

விளம்புமொழியின் விதத்தையறிந்து
சளமாமனத்தை தைரியமாக்கிப்
பழமையைப்போலப் பாதையைக்கண்டு
உளமேமகிழ வுண்டாம்பாரே. (க0)

உண்டபடியே யுமக்குநாஞ்சொல்வோம்
பண்டோர்மொழியின் பயனையுணர்ந்து
மண்டும்பிடாரி யரும்வழிதன்னை
தண்டாயடைந்தத்துலக்குங்கபமே. (கக)

கவத்தினைநீக்க காலனுமாண்டான்
சிவத்தையறிந்து தேறலாக்கண்டாய்
அவத்தைகளெல்லா மன்றேயடங்கும்
பவத்தையொழித்துப் பரகெதிசேரே. (கஉ)

கதிசேர்வதற்கு கருத்துடஞ்சொல்வோம்
விதியாம்பிடாறி விணுத்தண்டிலேதான்
பதியானவாசல் பஞ்சமுமுண்டுஞ்
சதியாங்கபங்கட் டன்னிரைப்பாமே. (கங)

நிரைப்பாகவைந்து வாசல்வாயும்
உரைப்பாகநின்று வுயிரையுமோட்டும்
திரைப்பானதங்கே செழுங்கதிர்போலும்
விரைப்பாகநின்று விளங்கிடுங்கேளே. (கச)

விளங்குமமுர்தம் விள்ளவகைகேள்
தலந்தனிலொனெய் தானரைவிசம்
வவமானவையான் வாகிடுயேநீயும்
புளமாயரைத்து ஒருபலந்தானே. (கரு)

தானுனமேனித் தனிக்கால்ப்பவர்தான்
ஊனுயனைத்து வுபராவிநெய்யில்
மானேகனைத்து வரும்பருவத்தில்
வேனுககாச்சம் விதப்படியாமே. (கசு)

ஆமடாபொன்போ லழகாககாய்ச்சி
தாமேயெடுத்துத் தனிக்கலயத்தில்
நாமடாவைத்தே நல்லதினத்தில்
சோமனைக்கண்டு சொல்லிடுவோமே. (கஎ)

சொல்லுவதென்ன ரவிதோற்றுமுன்னே
வெல்லுவோமென்று விதமாயெழுந்து
புல்குவலமுஞ் சலமுங்கழித்து
நல்குமவித்தைதை நாஞ்சொல்லுவோமே. (கஅ)

ஓமென்றுசொல்லி யுள்ளேநினைத்து
ஆமென்றநெய்யை யறிவுடன்தொட்டு
ஈமேவலது பெருவிரலாலே
தாமெனுமுண்ணாக் கடிதனிற்பாரே. (ககூ)

பார்த்துத்தடவப் பருதிமதிபோல்
ஏற்றவிராகுங் கேதுவுமுண்டு
சேர்த்துவலமாய் செழிப்புடனேதான்
தோற்றமதென்று சொல்லிடுநாலே. (க00)

நாலுதிரர்தான் நலமுடனியும்
மேலானவாசற் றன்னிலேதடவி
காலனுமென்னுங் கபத்தையொழித்து
பாலனைப்போலாம் பருவமுங்கேளே. (க0க)

கேளோருமண்டலங் கெணிதப்படியே
பாளேபோகாமல்ப் பருவமாய்த்தேயத்து
கோளேயகற்றிக் குறிப்புடன்பார்க்க
வாளேயமுர்த மப்போதிறங்கும். (கoஉ)

அப்போதனக்கு வழலதரெம்ப
தப்பாதேசேர்ந்தால்த் ணித்தமூதண்டம்
ஒப்பானகசாய முகப்புடன்தெ வ்வாய்
எப்போதமுன்ற ளைக்களிப்பாமே. (கoங)

எக்களிப்பாக யிதகொள்ளும்போது
மிக்கானவன்னம் உச்சியிற்சொள்ளு
மக்கான்புகைபுளி யிரண்டையுந்தள்ளு
நக்களேப்போலுங் நடிததிடலாமே. (கoச)

ஆமேகறுத்த குருவையரிசியும்
தாமடாப்பாசிப் பயரதக்கூட்டி
நாமேசமைதது நலந்தொருபோது
வேமாகக்கொண்டு வீற்றிருப்பாயே. (கoரு)

யிருப்பாய்யோகப் படிய ரைமண்டலம்
பொருப்பா த்திர று புளக்கம்தாகில்
உருப்பான மூலத்தின்வழலே
விருப்பாகவோங்கும் விரத்தையுங்கேளே.

கேளேயருண வுதையத்தெழுந்து
மீளேவலசலமின்போலக்கழித்து
தாளோதமிழ்றித் தனித்தகத்தனேப்
பாளேயைவேண்டி பகுந்திடுஞ்சோறே. (கoஎ)

சோத்தொடுமுத்தி னெண்ணையுஞ்சேர்த்து
ஆத்திரமாக வதைச்சிறுவிரலால்
சோத்தேயெடுத்து திரும்பவபானம்
பார்ததேசுழற்றிப் பகர்கின்றகாலை. (௧0அ)

கால்நாழிபோகக் கட்டும்மலங்கள்
கீழேயிழகிக் கிளம்பிடும்போது
மேலேயெழுந்து மிக்காகச்சுத்திசெய்
தானாகமேலே வழலைமுன்போலே. (௧0௯)

முன்போலும்பின்னும் முறையகாமண்டலம்
அன்பாகச்செய்து அதன்பிரகேதான்
தென்பாங்கபமுஞ் சிதறியொழிந்து
பினபோகபாலத் தமுர்தமிறங்கும். (௧௧0)

இறங்குமமுர்த மெப்போதுமுண்டு
உறங்காதுறங்கி ஊனைத்தவிர்த்து
ஒருங்காகநின்று வுயர்மலையேறி
சிறந்தேயிருக்கச் சின்மயந்தானே. (௧௧௧)

சின்மயானந்தச் செழுஞ்சுடர்தன்னை
உண்மையாக்கண்டா லோளிபோற்சடலம்
மின்மினென்றேதான் மிகவேதுலங்கும்
நன்மையைச்சொன்னேனுமநாதாக்கள்முன்னே.

முன்பேயடியேன் மொழிவதைப்பார்த்து
யன்பாகயென்னை யாதரித்தார்கள்
நன்பாயுரைத்தாய் நல்லவர்க்கென்று
என்பெயர்ஞான சித்தனென்றாரே. (௧௧௩)

சித்தகள்செய்த திறப்படவென்னல்
உத்தமமாக வுமக்குயாஞ்சொல்வோம்
புத்தியதாகப் புகன்றூர்பெரியோர்
அத்திமுகவ னருளினற்கேளே. (கககச)

அருளேயுருவா யவதரித்தோர்கள்
பொருளானசொல்லின் பொருளறிவார்கள்
இருளானகண்டத் தருகினிலப்பா
சாரும்மனத்தைச் சாக்கிறத்தேற்றே. (ககரு)

சாக்கிறந்தன்னிலத் தனியேமனத்தை
யாக்கியேயுர்தி யதனிற்றுரியம்
போக்கியேவிந்து புகழ்பெறவட்டம்
தேக்கியிம்மூன்றுஞ் செழிப்புடன்பாரே.

பாடாதன்னைப் பதிவாயறிந்து
வீரடாவாசிப் புரவியிலேறி
நீரேதரியத் தலத்திலேநின்று
சீரேறுங்கண்ணைச் செனிப்புடங்கண்டே.

கண்டதோருந்திக் கருத்தாயறிந்து
எண்டிசைபோற்ற யிருக்குந்தரியத்
தண்டையிற்காலை யறிவுடனூணி
விண்டனிற்சோதி விளங்கவும்பாரே. (ககஅ)

விளங்கிடுஞ்சாயா புரியினுக்குள்ளே
முளங்குமைபத்தை முன்முறைநீக்கி
உளம்புமனத்தை பொருகிலசேர்த்து
களங்கமகற்றிக் கண்டிடான்றே. (ககக)

நன்ருகமுன்னே நல்கும்வழலே
ஒனறேனுஞ்செய்த உறுதியதானுல்
அன்றேயமூர்த மல்லும்பகலுஞ்
சென்றேசடத்துள் செழித்திடும்தானே.(கஉ0

தானுனயோகந் தரமோவனந்தம்
வேனுகமுற்றும் விரித்தனர்வாரூ
தேனுனவாசி யோகமதென்றும்
மானேமவுனத்தி யோகமாமென்றும். (கஉக)

என்றுமகராச பத்தியோகத்தோடு
ஒன்றேபசுபதி யோகத்தினுடு
நன்ருஞ்சமாதி யோகமும்பின்பு
அனறேராஜானந்த யோகமதாமே. (கஉஉ)

ஆமடாகுளிகை யோகத்தினேடு
தாமேனும்ஞான யோகமாமென்றும்
போமேகெவுன யோகத்தினேடு
நாமடாசோன்னேம் நற்சிவயோகம். (கஉங)

சிவயோகமன்றி செய்வரனந்தம்
பவமானமூட்டை பறித்தெறியாத
அவமாகச்செய்வ ரட்டசித்தாலே
சிவலீலகண்டு செழித்திடார்தானே. (கஉச)

செழித்திடுஞ்செய்தி சிவயோகமப்பா
செழித்திடுஞ்செய்தி தெவிட்டாதமூர்தம்
செழித்திடுஞ்செய்தி திரேகமபிலத்தால்
செழித்திடும்வாசி திருவுடன்ருனே. (கஉ௫)

திருமாமறையைத் திருவாய்மலர்ந்த
குருமாமுனிவன் கூரியயோகம்
யிருமூணுபத்தா யிருந்திடுநாலுள்
உருவாகத்தானே யுரைத்தார் பெரியோர்.

பெரியோருரைத்த பெருமையைக்கேளு
அரிவானதீக்ஷை யடக்கத்தைநீயும்
விரிவாங்கணேச தீட்க்ஷையிநோடு
தெரிவாங்குண்டலியின் றீக்ஷையிநோடே.

ஓதசிவத்தக் குயர்பதினொன்றும்
மாதவாலாம்பிகை வகுத்தபடியே
நீதிதவறா திருதீக்ஷையோதி
சோதியருமூநத் தோனடித்தீக்ஷை. (௧௨௮)

ஒன்றானவைரவ தீக்ஷையின்பின்பு
நன்றானயோக தீக்ஷையுஞ்செய்து
என்றுமெய்ஞ்ஞான தீட்க்ஷையதாகில்
குணருதசித்தர் தீக்ஷையுஞ்செய்யே. (௧௨௯)

தீக்ஷையில்லாத சிவயோகமில்லை
தீக்ஷையில்லாதே திரும்பாதமுர்தம்
தீக்ஷையில்லாதே திரேகம்பிலக்காத்
தீக்ஷைக்குயிரே சிவயோகமாமே. (௧௩௦)

தீக்ஷைகளெல்லாஞ் சீக்ரமோதி
மாக்ஷிமையான மானடனத்தை
தாக்ஷியில்லாமற் றன்கடைபின்பு
உக்ஷமுமற்றுக் குளாவிவோரே. (௧௩௧)

குலாவியபின்பு ஞுணரகிதத்தின்
பலாபலன்றன்னைப் பகுந்தளைப்போம்கேள்
உலாவுமனத்தை யொருநிலையாக்கி
மலவைத்தவிர்க்க மகிமையைக்கேளே.(கநஉ)

கேளேமனத்தைக் கெடியாயடக்க
மீளமலவாசி மிகவேயடக்கும்
சூளேமனத்தைத் தலங்கியவண்ணாக்
காளுமிடத்தி லமத்தியபின்பே. (கநந)

பின்பேயுனக்குப் பேசவோக்கேளு
என்போல்மொழிகுது யாவர்தாஞ்செல்வார்
அன்பாமனத்தை யண்ணாக்கருகே
மின்பேலொடுக்கும் விதத்தையும்பாரே.

பாரடாவுன்ற னுண்ணாக்கிலேதான்
நிரடாருசியைத நீர்க்கமதாக
கோரடாபார்க்குஞ் சமையத்திலேதான்
நீரடாவாசி நின்றிடுமூச்சி. (கநரு)

உச்சிதலத்தி லுபாயமதாக
மெய்ச்சமனத்தை மிகவேநிறுத்தி
அச்சக்கறபோ லடங்குஞ்சுவாசம்
நிச்சையமாக நின்றதைக்கேளே. (கநசு)

நின்றநிலையே நிறவியாங்கற்பம்
என்றேசுமரு மின்பமதாகுர்
நன்றுயுனக்கு நாஞ்சொன்னபாதை
குன்றுமல்கண்டால் கூறுகின்றேமே.

கூருமுனிவர் குறித்தமரப்பை
யாருமறிய யியம்புகின்றேன்கேள்
சார்கின்றவுச்சித் தலத்திலழுத்தி
சேரும்மனத்தைத் தெளிவாகப்பாரே. (கஙஅ)

பார்த்திடும்போது பகலிரவற்று
ருத்திரவாசல் தாந்தனைக்கண்டால்
நாற்றிசையெல்லாம் நானென்பதற்று
வீற்றிருந்தாதி விழங்கிடுந்தானே. (கஙக)

தானவனாகத் தனித்தேயிருந்து
மானுபிமான வாழ்க்கையுமற்று
கோனெனநின்ற குறிப்பையறிய
நானிதைச்சொன்னேன் நாதர்கன்முன்னே.

முன்னான்வியாக்கிரம பாதருக்கேதான்
சொன்னமொழியின் றலக்கமதனை
தன்னுலரிந்து தலைவனுமாகி
பன்னோர்துதிக்கப் பலன்பெருவாரே.(கசக)

பகர்ந்தமொழியின் பயனையுணர்ந்தச்
சுகந்தனில்நின்று பெலங்குவதாறேன்
உகர்ந்திடும்போது உருமாதினுதன்
சுகந்தனில்மச்ச கேந்திரராமே. (கசஉ)

கேந்திரரோடு கெணித்தபராசர்
சேர்ந்தசௌசாங் கிருதநாதரோடு
ஆய்ந்தகோரக்க ரருள்விருபாக்ஷர்
சார்ந்தவில்லீஸ்பார் தரும்பரவரே. (கசங)

பைரவரோடு வருசுகானந்தர்
தைரியமாஞ்சித்த பாதனகபாலி
அயிர்பற்பனுப னரன்டிண்டினியும்
வெயிற்காகசண்டேஸ்வரனேடுதானே.(கசச)

தானேவிராசன் தருவித்தியானந்தன்
மானேயல்ல மாப்பிரபுவிஞேடு
தேனனுக போதனன்பின்பு
வேனுனசித்தர் வேண்டியபேரே. (கசரு)

பேரேயுனாக்க பெருகிடும்மொம்ப
வீரானதத்வக் கியானமறிந்து
கூராமெமன்றன் கொடுந்தண்டம்நீக்கி
பாரோசாரூப மாகின்றதாமே. (கசசு)

சாருபமாகித் தனியேயிருந்து
வேரூபமாகும் வெளியனடந்தன்னில்
கூராயுலாவி குணாகிதத்தை
ஆராய்ந்துபார்த்து அடங்குவார்தாமே.(கசஎ)

அடங்கிடுஞ்சோதி யாத்தமத்தள்ளே
திடம்படவிற்குந் தீக்ஷையைக்கண்டால்
மடங்களுமங்கே மகானுக்களங்கே
இடங்களைக்கண்டால் லேத்தமதாமே.(கசஅ)

ஏத்தமதாக யிருந்திடும்வாசி
ருத்திரந்தன்னைத் தலங்கவுங்கேளாய்
போற்றுமீராறு புலனையறிந்து
காத்திடும்பேனாக் கடவுளர்தாமே. (கசகூ)

தான்பெருந்தினித் தாயிஞ்சம்வேலை
வென்றனில்க்காமக் கலவியுரக்கம்
வேன்படுபாசம் விருத்தியிவ்வாரும்
தேன்படும்வாசி சிதறிடுக்கேளே. (கரு௦)

சிதறிக்கெடுத்து திரைகரையாக்கிப்
பதறிடச்செய்தப் பலத்தைக்கெடுக்கும்
உதரியிவ்வாரை யோட்டியபின்பு
சவாரிநடத்தஞ் சன்மையைக்கேளே. (கருக)

கேளேசந்தோஷம் கெடியாந்தைரியம்
மூளேயுறுதி யுயர்ந்தநற்சங்கம்
தாளேதத்வஞ் ஞயானம்புதமை
குளேயிவ்வாருஞ் சூழ்ந்திடில்நன்றே.(கருஉ)

இடமாகமுன்னேயியற்றும யோகத்தக்
குடனுசனத்தை யுரைக்கின்றேனேகேளு
திடமானயென்பத்து நான்காய்முன்னோர்
வடமாகக்கோர்த்த வரிசையதாமே. (கருரு)

ஆமடாஸ்வதிகம் அடுத்தகோமுகமுகம்
தாமடாபத்மந் தனியானவீரம்
வேமடாபத்திரம் விசையானகேசரி
போமடாமுத்தம் புகழுமயூரம். (கருச)

உற்றசகத்தோ டொன்பதந்தானே
சுற்றுசவில்லை சுருக்மெதாகும்
கற்றவத்தோர்கள் நலமிதுமேலோர்க்
குற்றதுனாஸ் சனமிதுதானே. (கருடு)

ஆசனம்காலே யரிந்திலர்யாரும்
யோசனையில்லா தெண்பதைத்தானே
பேசுவரன்றி பின்சொன்னாலேக்
கூசாமல்நாமுங் கூறுகின்றேமே. (கருசு)

ஓமென்னும்வாமம் பிறத்துக்குதியை
தாமேயெடுத்த சத்துவம்போலே
வேமென்றமூலந் தனிலேவைத்து
தாமென்றதின்கீ ழாகவுந்தானே. (கருஎ)

தாமென்றபீசந் தன்னிலேகேளு
தேனனதெற்கு குசைபினைவைத்து
ஊனனன் பிராணவாயுவைவரியும்
வேனுயிதையத் தலத்தினிலச்சேரோ. (கருஅ)

சேர்த்திடும்பின்பு திரமுடனுச்சி
பார்த்தேயிருந்து பண்புடனியும்
ஏத்தியதீபஞ் சித்திரம்போலும்
கார்த்தேயிருக்க கதிசேர்வதாமே. (கருக)

கதிசேர்வதன்றிக் கபாடந்திறக்கும்
விதியாளியாகில் வினையமாய்க்கண்டு
மதியோடுநின்று மகாசித்தனுகிப்
பதியோடுசேர்ந்து பண்புறவாமே. (கசுO)

பஸ்பானபற்பா சனமதைக்கேளு
விண்போன்றமூலந் தன்னிலேதானும்
நண்பானதெற்கு பாதமுமவைத்து
கண்போன்றவாம பாதத்தைக்கேளே. (கசுக)

பாதத்தைத்தெற்குப் பாதத்தின்மேலே
நீதத்துடனே நினைவுடன்வைத்து
தோதத்தமொண்டு கையதால்த்தானே
சாதத்தபாதந் தனையேபிடித்தே. (கசுஉ)

பிடித்தேயிதையத் தானத்திலேதான்
வெடித்ததோர்க்கண்டசங் கோசமும்பண்ணி
விடித்ததோர்நாசக் கிறதிஷ்டியதாகி
நடித்தேயிருக்க நற்பதந்தானே. (கசுங)

பதமாமூலகிற் பருதிநான்யட்டும்
யிதமாயிருந்தேவ் வினப்முங்கண்டு
நிதமுமகிழ்ந்து நிற்தொர்ந்தமாகிச்
சதமாகநிற்குந் தாமிததானே. (கசுச)

இதுகண்டபின்பு யேற்றசிக்கத்தை
சதாராயுனக்குத்தாஞ் சொல்வோங்கேளு
முதியாமவிருக்ஷத்தின் மூட்டதில்ரெண்டு
குதியின்றன்மூலங் குறிப்புடன்கேளே. (கசுரு

மூலத்தைச்சேர்த்து முனையோகவேஷ்டி
கோலத்துடனே குணமுடன்கட்டி
ஆலத்தையுண்ட வரனுரிருக்குஞ்
சீலத்தைக்கண்டு செளிப்புடனகேளே. (கசுசு)

செளிப்பாயிருந்து திரும்பவாகாசம்
களிப்பாககண்டேக் கருத்துடன்கும்பி
விளியானசோதி விழுங்கியமுன்னை
யளியாதவன்ன மரஞ்செய்குவானே. (கசுள)

வானேசிங்காசனம் வருத்தபட்டிக்கே
தானேயாகாசந் தன்னையும்பார்த்து
ஊனேயுள்வாயை யொடுக்கிஸ்வாசத்தை
வேணுகப்பார்க்கும் விதப்படியாமே. (௧௬௮)

விதமானமாய்கை ரெண்டையுந்தானும்
சதமானகால்மேல் தான்றூங்கவிட்டு
யிதமானபத்திரியத் தடன்ரோசித்தேதான்
அடமாக்கும்பித்தத் தன்பின்புபூரி. (௧௬௯)

பூரித்தபின்பு பூரணந்தன்னை
ரோசித்துநிற்க நின்மலனுனிச்
சாதித்தபத்திரா சனத்தையுனக்குத்
தெரிப்படுத்த திரமதைக்கேளே. (௧௭௦)

கேளேயிரண்டு கையதைப்பீசம்
குளேயடியிற் றுலக்கிடும்பித்தம்
மூளேநீமுத்திரை யாய்பிறங்கைக்கீழ்
மேலாயமுக்கி முன்போலிருந்தே. (௧௭௧)

இருந்ததிதுவே யேற்றிடும்பத்திரம்
ஒருங்கானவியாதி யோடிடுங்கண்டாய்
அறிந்தகோரக் கராசனமாமென்
அருங்காணுரைத்த வுபாயமிதாமே. (௧௭௨)

ஆமடாயின்னு லாசனந்தன்னுல்
வேமடாநாடி மிகவேயடங்கும்
தாமடாகண்டு தனித்தேயிருந்து
நாமடாசொன்னோம் நலம்பெறத்தாமே.

மேதினிதன்னில் மிகவானநூல்கள்
ஓதினிசித்த ருயர்பதம்போற்றி
வீதியதனில் விதித்ததின்றாலும்
வேதியர்க்காக விதித்தனம்பாரே. (௧௭௪)

வேதியரொன்று வினவிடும்பேரே
சாதிகள்நீக்கி சமரசமாகி
ஆதிப்பொருளை யனுதினம்போற்றி
யோதிடும்பேரே உயர்குலமாமே. (௧௭௫)

ஆமெனுமனுநூல்க ளனேகவிதமாய்
தமேயுரைப்பரிச் சகத்தினிலப்பா
போமிந்திரியத்லைதப் புகழ்விஷையத்திற்
தாமதைச்சேர்க்கல் தாம்பெரிதென்றும்.

என்றேயுரைத்து மின்னஞ்சிலர்கள்
என்றுமனத்தை யுயராதமத்தோடு
என்றுமிணைப்ப திதபெரிதென்றும்
அன்றேயுரைப்ப ரதவெரும்பொய்யே. (௧௭௭)

பொய்யன்றிமெய்யைப் புகலுவோர்களாய்
அய்யோவுலகி லறிவுள்ளவர்க்காய்
உய்கின்றவாரி னுபாயமறிந்து
செய்கின்றநூலின் றிறமிதுதானே. (௧௭௮)

தானேசிவாற்றுமா தன்னையுணர்ந்து
மானேபரமாத் மாவுடன்சேர்க்க
ஆனகல்யோகமாமென முன்னோர்
வேனுயுரைத்த விதத்தையும்பாரே. (௧௭௯)

பார்த்தேவைக்கியம் பண்ணுவிதந்தான்
சேர்த்தமனத்தைத் திரமாய்நிறுத்தி
கார்த்திடும்வாய்வைக் கருத்திற்றருத்திப்
போர்த்தியிருக்கப் பூரணம்நீயே. (௧௭௦)

பூரணமாகும் பொருளறியாமற்
காரணமென்ன கருதிடுவார்கள்
ஆரணந்தன்னை யறிந்துணர்ந்தோர்கள்
நாரணன்போலும் நண்ணுவர்தானே. (௧௭௧)

தாமேயறியார் தன்வழியில்லார்
காமக்குரோதங் கடக்கவுமாட்டார்
சேமவசனஞ் சிலசிலசொல்லும்
பாமரர்தன்னைப் பார்க்கவொண்ணுதே.

பார்த்தாலுந்தோடம் பயனரியோரைச்
சேர்த்தாலுனக்குத் திருப்பாதகம்
ஏற்றபடியே யிணக்கமுள்ளோர்க்கு
ஆர்த்தமொழியி னருத்தமும்பேசே. (௧௭௩)

பேசவும்வேண்டாம் பிழைசெய்வோர்கூட
தோஷமும்வந்து சுற்றிடுஞ்சொன்னேன்
வாசவன்றேவர்கள் வருத்தமுனிவர்கள்
நேசர்களாகிற் றிருவுடன்றானே. (௧௭௪)

திருமாமறையைத் திருவாய்மலர்ந்த
குருமாமுனிவன் கூறியயோகம்
இருமூன்றுபத்தா யிருந்திடுநாலுள்
உருவாகத்தானே யுரைத்தார்பெரியோர்.

தானேமுனிவர் தவசிகள்சித்தர்
மானேகௌனி வளர்ந்திடும்வானோர்
வேனுபுரைத்த விதமானநூலுன்
யானுமறிந்த வியற்கையிதாமே. (௧அ௬)

தாரணைசெய்யார் தன்னையறியார்
பூரணம்நின்ற புதமையைக்காணார்
தாரணைதானே சடத்திருக்கங்கு
தாரணைதன்னாற் சடமதமெய்யே. (௧அ௭)

மெய்யுளேவாழு மிகுபஞ்சபூதத்
தய்யகம்வாய்வே யவனிவாய்லென்றும்
தய்யவெளியே யுலகவெளியென்
பையுநுட்டமேயே பகர்வெளியென்றும். (௧அ௮)

என்றகம்முள்ளத் திருந்திடும்நீரை
அன்றேயுலகி லமைந்திடுநீராய்
ஒன்றேயுள்மண்ணை யுலகமண்ணென்றும்
அன்றேநினைத்தே யதன்பின்புகேளே. (௧அ௯)

கேளேமுழங்கால்க் கீழ்புரமட்டும்
குளேபிரமன் றலங்கிடுமென்னும்
ஆளடாதொப்புள் அதவரைவிஷ்ணு
தாளேனும்நீராயத் தான்கண்டபின்பே.

பின்பதில்நின்று பேசியமார்புக்
கன்புள்ளருத்திர னக்கினியென்றும்
தன்பமகற்றுஞ் சொல்புருவத்தோடு
ஒன்றுமகேச னுற்றவாய்வென்றும். (௧௧௧)

உற்றபுருவத்தட னண்டமட்டும்
சற்சிவரூபம் நல்வெளியென்றும்
முற்றும்மனமே யுயர்மதியென்றும்
சிற்பரஞ்சோதி திகளுமவாக்கென்று. (௧௧௨)

வாக்கினிற்றேய்வு வகுத்திடுங்காதிற்
போக்கியதேதி புகழ்ந்திடுந்தோளுக்
காக்கியவிஷ்ணு ஹரிநற்புயத்திற்
றேக்குங்குதததில் திகழ்மிருத்தியவே.(௧௧௩)

மிருத்தியினோடு மிருமுபசத்தக்
குறித்திடும்பிரசா பதிநொக்கில்வாயுவு
விருத்திடுங்கண்ணில் விழங்கியசூரியன்
பிரித்திடும்நாவிற் பேசும்வருணன். (௧௧௪)

வருணனினோடே வகுத்திடுமூக்குக
அருன்புவிமாதென் னந்தரியாமி
தெருளிந்தவீதம் திரமாய்நினைத்து
வருபஞ்சபூதம் மகாபூதந்தன்னில். (௧௧௫)

தன்னையம்மாய்கை தன்னிலேயொடுக்கி
பின்னுமம்மாய்கை பேசுமாத்மாவில்
நன்னயமாக நயமாயொடுக்கி
சின்மயநாதானேன் றிருப்பதுதானே. (௧௧௬)

தானுமித்தாரணே தன்வசம்மில்லார்
மானுபிமா வளக்குமொழிக்கார்
ஊனுஞ்சடத்தின் றெளிவதைக்கானோர்
யீனராமென்றே யியம்புமறையும். (௧௧௭

மறையின்முடிவே மகாசிவயோகம்
மறையின்முடிவே மகிழ்ந்திடும்ஞானம்
மறையின்முடிவே மானிலத்தாதி
மறையின்முடிவிம் மறையிதுதானே. (௧௯௮)

தவத்தினுக்காதி தன்னையுணர்தல்
தவத்தினுக்காதி தலைவனைக்காணல்
தவத்தினுக்காதி சடந்தினைப்பேணல்
தவத்தினுக்காதி தைரியமாமே. (௧௯௯)

தைரியம்விட்டார் தன்னுடல்கெட்டார்
தைரியம்விட்டார் தன்னையுணரார்
தைரியம்விட்டார் சமரசத்தேகார்
தைரியம்விட்டார் தவமயவாமே. (௨௦௦)

அவனன்றிவேறொன் றசையாததாலெத்
தவனேயர்கட்குந் தாசனென்றேயிக்
குவலயந்தன்னிற் கூர்ஞானசித்தன்
கவமானதுலென் னுள்வாழிதானே

(முற்றுப்பெற்றது)

---

போதிகாசலப்புலவன்
பூங்கழல்கள்வாழ்க.